रुचिर्वररुचिर्वन्द्यो वाचस्पतिः अहर्पतिः ।
रविर्विरोचनः स्कन्धः शास्ता वैवस्वतोऽजनः ॥ ५५ ॥

युक्तिः उन्नतकीर्तिश्च शान्तरागः पराजयः ।
कैलासपतिकामारिः सविता रविलोचनः ॥ ५६ ॥

विद्वत्तमो वीतभयः विश्वहर्तानिवारितः ।
नित्यः नियतकल्याणः पुण्यश्रवण कीर्तनः ॥ ५७ ॥

55. ருசிர் வரருசிர் வந்த்[3]ய : வாசஸ்பதி : அஹர்பதி : |
ரவிர்விரோசந : ஸ்கந்த[4] : ஶாஸ்தா வைவஸ்வதோஜந : ||

56. யுக்தி : உன்னதகீர்த்திஶ்ச ஶாந்தராக[3] : பராஜய : |
கைலாஸபதிகாமாரி : ஸவிதா ரவிலோசந : ||

57. வித்[3]வத்தமோ வீதப[4]ய : விஶ்வஹர்த்தாநிவாரித : |
நித்ய : நியதகல்யாண: புண்யஶ்ரவண கீர்த்தன : ||

55. ஒளியின் உருவானவர், சிறந்த ஒளி கொடுப்பவர், வணங்கத் தகுந்தவர் வித்யையின் அதிபர், பகலின் அதிபர் (சூரியன்). பிரம்மாண்டத்திற்கு ஒளிதரும் சூரிய வடிவானவர்?, சமூகத்தின் உருவானவர், யாவரையும் ஆளும் யமன் உருவானவர், பிறப்பற்றவர்.

56. சமாதிநிலையின் உருவானவர், சிறந்த கீர்த்தி தருபவர், ஆசையற்றவர்களால் விரும்பப்படுபவர், எல்லோரையும் தோற்கடிப்பவர் கைலாயநாதனுகி மன்மத னின் எதிரியானவர். உலகின் உற்பத்தி ஸ்தானம், சூரியனைக் கண்ணாகக் கொண்டவர்.

57. அறிவாளிகளால் எதிர்பார்க்கப்படுகிறவர், எல்லாவிடத்திலும் பயத்துடன் பார்க்கப்படுபவர், உலகத்தை அழிக்கும்கால் ஒருவராலும் தடுக்கப்படாதவர், அழிவற்றவர், இடைவிடாமல் மங்களத்தை வழங்குபவர், தன் புகழ் பாடுபவனுக்கும் கேட்பவனுக்கும் புண்யம் தருபவர்.

दूरश्रवाः विश्वसहः ध्येयो दुःस्वप्ननाशनः ।
उत्तारको दुष्कृतिहा दुर्धर्षो दुःसहोऽभयः ॥ ५८ ॥

अनादिर्भूर्भुवो लक्ष्मीः किरीटित्रिदशाधिपः ।
विश्वगोप्ता विश्वभर्ता सुधीरो रुचिराङ्गदः ॥ ५९ ॥

जननो जनजन्मादिः प्रीतिमान् नीतिमान् नयः ।
विशिष्टः काश्यपो भानुः भीमो भीमपराक्रमः ॥ ६० ॥

58. தூ3ரஸ்ரவா : விஶ்வஸஹ : த்4யேயோ து3ஸ்வப்ந நாஶன : |
உத்தாரகோ து3ஷ்க்ருதிஹா து3ர்த்தர்4ஷோ து3ஸ்ஸஹோऽப4ய : ||

59. அநாதி3ர் பூ4ர் பு4வோ லக்ஷ்மீ : கிரீடித்ரித3ஶாதி4ப : |
விஶ்வகோ2ப்தா விஶ்வப4ர்தா ஸுதீ2ரோ ருசிராங்க3த3 : ||

60. ஜனனோ ஜநஜன்மாதி :3 ப்ரீதிமான் நீதிமான் நய : |
விஶிஷ்ட : காஶ்யபோ பா4னு : பீ4மோ பீ4மபராக்ரம : ||

58. தூரதேசங்களிலும் கேட்கப்படுகிறவர், உலகை தாங்குபவர், தியானம் செய்யத் தகுந்தவர், கெட்ட கனவுகளை போக்குபவர், சம்ஸாரக் கடலின் கரை சேர்ப்பவர், கெட்டவர்களை நாசம் செய்பவர், முற்றுகையிடப்பட முடியாதவர், அசுரர்களால் சகித்துக்கொள்ள முடியாதவர், பயத்தை நீக்குபவர்.

59. பிறப்பற்றவர், பூமியின் உருவினர், பூமிக்கு சோபை தருபவர், முக்கியமான தேவர்களின் தலைவர், உலகை காப்பவர், உலகை போஷிப்பவர், நன்கு பயமற்றவர் அழகிய தோள்வளைகளுள்ளவர்.

60 உலகை சிருஷ்டி செய்தவர், மக்களின் பிறப்பு முதலியவற்றிற்கு காரணம், நேசிப்பவர், நீதியுடன் நடப்பவர், (நீதி) நியாயம் உருவானவர், பிரளய காலத்திலும அழிவற்றவர், கச்யபரின் புதல்வர், சூரிய உருவினர், பயமுறுத்துபவர், சிறந்த பராக்ரமங்களை அளிப்பவர்.

प्रणवः सप्तधाचारः महाकायो महाधनुः ।
जन्माधिपो महादेवः सकलागमपारगः ॥ ६१ ॥

तत्त्वातत्त्वविवेकात्मा विभूष्णुः भूतिभूषणः ।
ऋषिः ब्राह्मणवित् जिष्णुः जन्ममृत्युजरातिगः ॥ ६२ ॥

यज्ञो यज्ञपतिर्यज्वा यज्ञान्तोमोघविक्रमः ।
महेन्द्रः दुर्भरः सेनी यज्ञाङ्गो यज्ञवाहनः ॥ ६३ ॥

61. ப்ரணவ : ஸப்ததா4சார : மஹாகாயோ மஹாத4னு : |
ஜந்மாதி4போ மஹாதே3வ : ஸகலாக3மபாரக3 ||

62. தத்வாதத்வவிவேகாத்மா விபூ4ஷ்ணு : பூ4திபூ4ஷண : |
ருஷி : ப்ராம்மணவித் ஜிஷ்ணு : ஜன்மம்ருத்யுஜராதிக3 : ||

63. யக்ஞோ யக்ஞபதிர் யஜ்வா யக்ஞாந்தோ (அ)மோக4விக்ரம : |
மஹேந்த்3ர : து3ர்ப4ர : ஸேனீ யக்ஞாங்கோ3 யக்ஞவாஹந : ||

61. ஓங்காரமானவர், ஏழுவகை வாயுவின் உருவில் சஞ்சரிப்பவர், பெரும் உருவத்துடன் பெரும் வில்லேந்தியவர், சிருஷ்டியின் தலைவர், தேவர்களை வணங்கத்தக்கவர்களாக செய்தவர், எல்லா வேதங்களிலும் கரைகடந்தவர்.

62. உண்மையான மூலதத்துவப் பொருள், உண்மையான பொருள் இவைகளின பாகுபாடு செய்வதையே தன்னுருவாகக் கொண்டவர், எல்லா இடததிலும் இருப்பவர், அணிமா முதலிய யோகசித்திகளை அணிகலமாகக் கொண்டவர், புலன்களுக்கு அப்பாற்பட்டதை உணர்த்துபவர், பிராம்மணர்களுக்கு (பரம்பொருளை உபாஸிப்பவர்கட்கு) ஞானத்தையும் வெற்றியையும் அளிப்பவர், பிறப்பு இறப்பு மூப்பு நிலைகளைக் கடந்தவர்.

63. வேள்வியின் உருவாகி வேள்வியின் தலைவனாகியிருப்பவர், வேள்வி புரிபவரின் உருவுமானவர், வேள்வியை நிறைவேற்றுபவர், வீண்போகாத பராக்ரமமுள்ளவர், பரமேச்வரர், மனதில் நிலைநிறுத்த முடியாதவர், பிரமதர்களின் படையுடையவர் யாகத்தை உறுப்பாகக் கொண்டவர், யாகத்தின் மூலம் அடையப்படுபவர்.

पञ्चब्रह्मसमुत्पत्तिः विश्वेशो विमलोदयः ।
आत्मयोनिः अनाद्यन्तः षड्विंशत्सप्तलोकधृक् ॥ ६४ ॥

गायत्रीवल्लभः प्रांशुः विश्वावासः प्रभाकरः ।
शिशुः गिरिरतः सम्राट् सुषेणः सुरशत्रुहा ॥ ६५ ॥

अमोघः अरिष्टमथनः मुकुन्दो विगतज्वरः ।
स्वयं ज्योतिः अनुज्योतिः आत्मज्योतिरचञ्चलः ॥ ६६ ॥

64. பஞ்ச ப்³ரம்ம ஸமுத்பத்தி : விஶ்வேஶோ விமலோத³ய : |
ஆத்மயோனி : அனாத்³யந்த : ஷட்³விம்ஶத் ஸப்தலோகத்⁴ருக் ||

65. கா³யத்ரீவல்லப⁴ : ப்ராம்ஶு : விஶ்வாவாஸ : ப்ரபா⁴கர : |
ஶிஶு : கி³ரிரத : ஸம்ராட் ஸுஷேண : ஸுரஶத்ருஹா : ||

66. அமோக ;⁴ அரிஷ்டமத²ன : முகுந்தோ³ விக³தஜ்வர : |
ஸ்வயம்ஜ்யோதி : அநுஜ்யோதி : ஆத்மஜ்யோதி : அசஞ்சல : ||

64. சத்யோஜாதர் முதலியவர்களுக்கு காரணமானவர், உலகத்தின் தலைவர், பரிசுத்தமான சிருஷ்டியின் காரணம், தனக்கு காரணமற்றவர், பிறப்பு இறப்பற்றவர், இருபத்தாறு தத்துவங்களையும் ஏழுலகையும் தாங்குபவர்.

65. காயத்ரியின் அன்புக்கு பாத்திரமானவர், சுஷும்ன முதலிய விசேஷமான கிரணங்கள் உடையவர், உலகத்தை வியாபித்து நிற்பவர், விசேஷ ஒளி கொடுப்பவர், குழந்தை உருவானவர், மலைமீது ஆசை கொண்டவர், சிறந்த சேனைகளை கொடுப்பவர், தேவரின் எதிரிகளையழிப்பவர்.

66. வீணாகாத ஸங்கல்பமுடையவர், பக்தரின் கெடுதல்களையழிப்பவர், முக்தி தருபவர் சம்ஸார துக்கத்தை நீக்குபவர், தானே ஒளிர்பவர், தன்னொளியால் ஒளிரச் செய்யும் நக்ஷத்திரங்களை உடையவர், சைதன்ய உருவான சரீரம் படைத்தவர், சலனமற்றவர் (கூடஸ்தர் எனும் ஆத்மா உருவினர்).

पिङ्गलः कपिलश्मश्रुः शास्त्रनेत्रस्त्रयीतनुः ।
ज्ञानस्कन्धः महाज्ञानी निरुत्पत्तिरुपप्लवः ॥ ६७ ॥

भगो विवस्वानादित्यः योगाचार्यो बृहस्पतिः ।
उदारकीर्तिः उद्योगी सद्योगी सदसन्मयः ॥ ६८ ॥

नक्षत्रमाली राकेशः साधिष्ठानः षडाश्रयः ।
पवित्रपाणिः पापारिः मणिपूरो मनोगतिः ॥ ६९ ॥

67. பிங்க³ல : கபிலஶ்மஶ்ரு : ஶாஸ்த்ரநேத்ர ; த்ரயீதனு : |
ஞானஸ்கந்த⁴ : மஹாக்ஞானீ நிருத்பத்திருபப்லவ : ||

68. ப⁴கோ³ விவஸ்வான் ஆதித்ய : யோகா³சார்யோ ப்³ருஹஸ்பதி :
உதா³ரகீர்த்தி உத்³யோகீ³ ஸத்³யோகீ³ ஸத³ஸன்மய : ||

69. நக்ஷத்ரமாலீ ராகேஶ ; ஸாதி⁴ஷ்டா²ன : ஷடா³ஶ்ரய :
பவித்ரபாணி : பாபாரி : மணிபூரோ மனோக³தி ||

67. பழுப்புநிறமுடையவர், பழுப்புநிற மீசையுடையவர், வேதத்தை உடலாகக் கொண்ட சாஸ்திரங்களை கண்ணாக உடையவர், ஞானத்தின் சமூகம, பூர்ண ஞானம் பொருந்தியவர், பிறப்பற்றவர், ராகுவின் உருவானவர்.

68. ஆறுகுணங்களும் ஐச்வரியமும் படைத்தவர், ஒளிக்கிரணங்கள் பொருந்திய அதிதியின் புதல்வனானவர், யோகத்திற்கு ஆசிரியர், பிருஹஸ்பதியானவர் வேண்டியதை கொடுக்கும் ஆற்றல் உடைய கீர்த்தியையுடையவர், சிறந்த யோகத்தில் ஈடுபட்டவர், பரம்பொருளை அடையச் செய்பவர், பரம்பொருள் உலகு—இரு உருவிலுமுள்ளவர்.

69. நக்ஷத்திரங்களை ஒளிரச் செய்யும் சந்திரன் உருவானவர், பிரகிருதியுடன் இருப்பவர், காமம், குரோதம் முதலிய ஆறு குணங்களின் இருப்பிடம், பரிசுத்தமான கையுடையவர், பாவங்களின் எதிரி, ஏராளமான சிறந்த ரத்தினங்களை வழங்குபவர், மனதை தவிர வேறு புலன்களால் உணர முடியாதவர்.

हृत्पुण्डरीकमासीनः शुक्लः शान्तः वृषाकपिः ।
विष्णुः ग्रहपतिः कृष्णः समर्थः अनर्थनाशनः ॥ ७० ॥

अधर्मशत्रुः अक्षय्यः पुरुहूतः पुरुष्टुतः ।
ब्रह्मगर्भः बृहद्गर्भः धर्मधेनुः धनागमः ॥ ७१ ॥

जगद्धितैषिसुगतः कुमारः कुशलागमः ।
हिरण्यवर्णो ज्योतिष्मान् नानाभूतधरो ध्वनिः ॥ ७२ ॥

70. ஹ்ருத்புண்ட3ரீகமாஸீன : ஶுக்ல : ஶாந்த : வ்ருஷாகபி : |
விஷ்ணு : க்3ரஹபதி : க்ருஷ்ண : ஸமர்த்த2 : அநர்த்த2நாசன* : ||

71. அத4ர்ம ஶத்ரு அக்ஷய்ய : புருஹூத : புருஷ்டுத : |
ப்3ரம்மக3ர்ப்ப4 : ப்3ருஹத்3க3ர்ப்ப4 : த4ர்மதே4னு : த4னாக3ம : ||

72. ஜக3த்ஹிதைஷிஸுக3த : குமார : குஶலாக3ம : |
ஹிரண்யவர்ணோ ஜ்யோதிஷ்மான் நாநாபூ4தத4ரோ த்4வனி : ||

70. பக்தரின் இதயகமலத்தில் வீற்றிருப்பவர், வெண்மையானவர், மனதின் அ
கத்தால் அசையாமல் தர்மத்தை காப்பவர், எங்கும் நிறைந்தவர், நவகிரகங்க
தலைவர், கிருஷ்ணரூபமானவர், எல்லா செல்வமும் நிறைந்தவர், எல்லா கஷ்டங்
களையும் அழிப்பவர்.

71. அதர்மத்தின் எதிரி, குறைவற்றவர், வேதங்களில் துதிக்கப்படும் இந்திரனின் வடிவானவர், பிரமனை கருவில் கொண்டவர், பிரம்மாண்டத்தை கருவில் கொண்டவர், தருமத்தை ஈன்ற பசுபோல் இருப்பவர், வேண்டியமட்டும் செல்வத்தையளிப்பவர்.

72. உலகின் நன்மையை கோறுபவர்களுக்கு சுகமான வழியை காட்டுபவா உலகுருவத்தில் லீலை புரிபவர், நன்மை பயப்பவர், பொன்நிறமுடையவர், ஒளி பொருந்தியவர், பல உயிரினங்களையும் காப்பவர், அநாகத ஒலியானவர்.

---

* 'அர்த்த2நாசன :' என்று ஒரு பாடம் உண்டு.

अरोगो नियमाध्यक्षः विश्वामित्रो द्विजोत्तमः ।
बृहद्ज्योतिः सुधामा च महाज्योतिः अनुत्तमः ॥ ७३ ॥

मातामहो मातरिश्वा नभस्वान् नागहारधृक् ।
पुलस्त्यः पुलहोऽगस्त्यः जातुकर्ण्यः पराशरः ॥ ७४ ॥

निरावरणधर्मज्ञः विरिञ्चो विष्टरश्रवाः ।
आत्मभूः अनिरुद्धोत्रिज्ञानमूर्तिः महायशाः ॥ ७५ ॥

73. அரோகோ[3] நியமாத்ய[4]க்ஷ : விஶ்வாமித்ரோ த்[3]விஜோத்தம : |
ப்ருஹத்[3]ஜயோதி : ஸுதா[4]மா ச மஹாஜ்யோதி : அநுத்தம ; ||

74. மாதாமஹோ மாதரிஶ்வா நப[4]ஸ்வான் நாக[3]ஹாரத்[4]ருக் : |
புலஸ்த்ய : புலஹோக[3]ஸ்த்ய : ஜாதுகர்ண்ய[4] பராஶர : ||

75. நிராவரணத[4]ர்மக்[3]ஞ : விரிஞ்சோ விஷ்டரஶ்ரவா : ||
ஆத்மபூ[4] : அநிருத்தோ[4]த்ரிக்ஞானமூர்த்தி : மஹாயஶா : ||

73. வியாதிகளை நீக்குபவர், விதிகளின் (சட்டங்களின்) முதல்வர், சிறந்த வேதியரான விசுவாமித்ரரானவர், பேரொளியான சூரியனுக்கு காரணமானவர், நல்ல தேஜஸ் பொருந்தியவர், இடைவிடாமல் ஒளிரும் ஜ்யோதிரூபமானவர், எல்லோரிலும் சிறந்தவர்.

74. உலகின் தாயான மாயையின் தந்தை, வாயுவின் உருவானவர், ஆகாயத்தை தன்னில் கொண்டவர், பாம்பை மாலையாக தரித்தவர், புலஸ்த்யர், புலஹர் அகஸ்தியர், ஜாதுகர்ண்யர், பராசரர் ஆகிய ரிஷிகளின் உருவானவர்

75. மோக்ஷ தர்மத்தை அறிந்தவர், பிரமனின் வடிவானவர், 'அசுவத்தமரம்' என்று கூறப்படும் மகிமையுள்ளவர் (விஷ்ணுவின் வடிவானவர்), வ்யூஹாவதாரமான பிரத்யும்னரின் வடிவானவர், தடுக்கப்படாத சக்தியுடையவர் (அநிருத்தரின் வடிவானவர்) அத்ரி ரிஷி எனும் ஞானமூர்த்தியானவர், யாவராலும் புகழப் படுபவர்.

लोकचूडामणिः वीरः चण्डसत्यपराक्रमः ।
व्यालकल्पो महाकल्पः महावृक्षः कलाधरः ॥ ७६ ॥

अलङ्करिष्णुः त्वचलः रोचिष्णुः विक्रमोत्तमः ।
आशुशब्दपतिः वेगी प्लवनः शिखिसारथिः ॥ ७७ ॥

असंसृष्टः अतिथिः शक्रः प्रमाथी पापनाशनः ।
वसुश्रवाः कव्यवाहः प्रतप्तो विश्वभोजनः ॥ ७८ ॥

76. லோகசூடா³மணி : வீர : சண்ட³ஸத்யபராக்ரம : |
வ்யாலகல்போ மஹாகல்ப : மஹாவ்ருக்ஷ : கலாதர : ||

77. அலங்கரிஷ்ணு : த்வசல : ரோசிஷ்ணு : விக்ரமோத்தம : |
ஆஶு ஶப்³த³பதி : வேகீ³ ப்லவன : ஶிகி² ஸாரதி² : ||

78. அஸம்ஸ்ருஷ்ட : அதிதி² : ஶக்ர : ப்ரமாதீ² பாபநாஶன : |
வஸுஶ்ரவா: கவ்யவாஹ : ப்ரதப்தோ விஶ்வபோ⁴ஜன : ||

76. உலகிற்கு தலையிலுள்ள ரத்னம் போன்றவர், வீரர், 'சண்டர்' என்ற கணங்களுக்கு உண்மையான பராக்ரமத்தை அளித்தவர், வாசுகி என்ற ஸர்ப்ப ராஜாவின் உருவானவர், பூசிக்கப்படும் நியாயத்தின் உருவானவர், உலகமாகிற மரத்தின் காரணமானவர், சந்திரகலை யணிந்தவர்.

77. பக்தருக்கு வேண்டியமட்டும் கொடுப்பவர், இமாலய வடிவினர், நன்கு பிரகாசத்தையளிப்பவர், வீரர்களில் சிறந்தவர், எவரையும் பேச்சில் வல்லவராக ஆக்கும் திறன் படைத்தவர், பக்தரின் நலனுக்கான காரியங்களை செய்வதில் வேகத்தை காட்டுபவர், சம்ஸாரக்கடலை கடக்கவைப்பவர், அக்நியின் நண்பரான வாயுவின் உருவானவர்.

78. மாயையுடன் சேராதவர், விருந்தாளியின் உருவானவர், அசுரர்களை அழிக்கவல்ல இந்திரனின் உருவானவர், பாவங்களை அழிப்பவர், கேட்பதற்கு இனிமையானவர், அக்னி வடிவானவர், சிறந்த தவவலிமையுள்ளவர், உலகையே உணவாகக் கொண்டவர்.

जर्यो जराधिशमनः लोहितश्च तनूनपात् ।
पृषदश्वः नभोयोनिः सुप्रतीकः तमिस्रहा ॥ ७९ ॥

निदाघस्तपनो मेघः पक्षः परपुरञ्जयः ।
मुखानिलः सुनिष्पन्नः सुरभिः शिशिरात्मकः ॥ ८० ॥

वसन्तो माधवो ग्रीष्मः नभस्यः बीजवाहनः ।
अङ्गिरा मुनिरात्रेयः विमलो विश्ववाहनः ॥ ८१ ॥

79. ஜர்யோ ஜராதி⁴ஶமந: லோஹிதஶ்ச தநூநபாத் :|
ப்ருஷத³ஶ்வ : நபோ⁴யோநி : ஸுப்ரதீக தமிஸ்ரஹா ||

80. நிதா³க⁴: தபனோமேக⁴ : பக்ஷ: பரபுரஞ்ஜய :|
முகா²நில: ஸுநிஷ்பன்ன; ஸுரபி⁴: ஶிஶிராத்மக: ||

81. வஸந்தோ மாத⁴வோ க்³ரீஷ்ம: நப⁴ஸ்ய: பீ³ஜவாஹந:|
அங்கி³ரா முனிராத்ரேய: விமலோ விஶ்வவாஹன:||

79. உணவின் உருவானவர், மூப்பையும் மனக்கவலையையும் நீக்குபவர், சிவப்புநிறம் கொண்டவர், (பக்தர்களுக்கு) தன் உடலையே கொடுப்பவர், (நீர்த்திவிலைகளை தாங்கும்) வாயு உருவானவர், ஆகாயமானவர், உலகின் காரணமானவர், நல்ல உறுப்புகளை கொண்டவர், அக்ஞானத்தை போக்குபவர்.

80. கோடைகால உருவானவர், மலைச்சாரல்களில் உண்டாகும் மேகத்தின் வடிவினர், பக்தர்களின் எதிரிகளின் நகரங்களை வெல்பவர், உயிரினங்களின் முகத்தில் பிராணவாயுவின் நடமாட்டத்திற்கு காரணமானவர், எல்லா நன்மையும் பயப்பவர், நன்கு சந்தோஷத்தை கொடுப்பவர், குளிர்காலமானவர்.

81. தேன் நிறைந்த வஸந்தகாலமானவர், கோடை உருவினவர், மழைகாலமானவர், குளிர்காலமானவர், அங்கிரஸ் என்ற முனிவரானவர், அத்ரியின் புதல்வரான முனிவர் உருவானவர், பரிசுத்தமானவர், உலகத்தை தன்னிடம் சுமப்பவர்.

पावनः पुरुजित् शक्रः त्रिविधो नरवाहनः ।
मनोबुद्धिरहंकारः क्षेत्रज्ञः क्षेत्रपालकः ॥ ८२ ॥

तेजोनिधिः ज्ञाननिधिः विपाको विघ्नकारकः ।
अधरः अनुत्तरः ज्ञेयः ज्येष्ठो निःश्रेयसालयः ॥ ८३ ॥

शैलो नगस्तनुः दोहः दानवारिः अरिन्दमः ।
चारुधीर्जनकः चारु विशल्यो लोकशल्यकृत् ॥ ८४ ॥

82. பாவந: புருஜித் ஶக்ர: த்ரிவித்³யோ நரவாஹந: |
மனோபு³த்தி⁴ரஹங்கார: க்ஷேத்ரக்ஞ: க்ஷேத்ரபாலக: ||

83. தேஜோநிதி⁴: க்ஞானநிதி⁴: விபாகோ விக்⁴நகாரக: |
அத⁴ர: அநுத்தர: க்ஞேய: ஜ்யேஷ்டோ² நிஃஶ்ரேயஸாலய: ||

84. ஶைலோ நக³ஸ்தனு: தோ³ஹ: தா³ன்வாரி: அரிந்த³ம: |
சாருதீ⁴ஜனக: சாரு விஶல்யோ லோகஶல்யக்ருத் ||

82. பாவங்களை நீக்குபவர், பலரையும் வெற்றி கொண்டவர், எதையும் ஆக்கவோ அழிக்கவோ வல்லவர், முக்குணம் படைத்த பிரகிருதியின் உருவானவர் குபேரனின் உருவானவர், மனதுடன் கூடிய புத்தியின் உருவானவர், அகங்கார வடிவினர், ஜீவாத்மாவின் உருவானவர், சித்தர்களின் இடங்களை காப்பவர்.

83. ஒளியின் நிதி, ஞானத்தின் இருப்பிடம், வினைப்பயனை தருபவர், (அசுரர்களின் நல்ல செயல்களை தடுப்பவர்) விநாயகரின் வடிவினர், யாவற்றின் ஆதாரமானவர் எல்லோருக்கும் மேலிருப்பவர், புண்ணியம் செய்தவர்களால் அறியக்கூடியவர் எல்லோருக்கும் முதியவர், மோக்ஷத்தின் இருப்பிடம்.

84. லிங்கவடிவானவர், ஸ்ரீசைலமலை வடிவானவர், மிக நுட்பமான வடிவினர், வேண்டியவற்றை நிறைப்பவர், அசுரரை அழிப்பவர், பக்தரின் சத்துருக்களை அழிப்பவர், கூரிய புத்தியுடைய ஜனகரின் உருவானவர், கூரிய புத்தியுடையவர்களின் துன்பங்களை நீக்குபவர், பேதபுத்தியுடையவர்களுக்கு துன்பமளிப்பவர்.

चतुर्वेदः चतुर्भावः चतुरः चतुरप्रियः ।
आम्नायोऽथ समाम्नायः तीर्थदेवशिवालयः ॥ ८५ ॥

बहुरूपः महारूपः सर्वरूपः चराचरः ।
न्यायनिर्वाहको न्यायः न्यायगम्यः निरञ्जनः ॥ ८६ ॥

सहस्रमूर्धा देवेन्द्रः सर्वशस्त्रप्रभञ्जनः ।
मुण्डो विरूपो विकृतः दण्डी दान्तो गुणोत्तमः ॥ ८७ ॥

85. சதுர்வேத3: சதுர்பா4வ; சதுர: சதுரப்ரிய: |
ஆம்நாயோத2 ஸமாம்நாய; தீர்த்த2தே3வஶிவாலய:||

86. ப3ஹுரூப: மஹாரூப: ஸர்வரூப: சராசர: |
ந்யாயநிர்வாஹகோ ந்யாய: ந்யாயக3ம்ய: நிரஞ்ஜன;||

87. ஸஹஸ்ரமூர்த்தா4 தே3வேந்த்3ர: ஸர்வஶஸ்த்ரப்ரப4ஞ்ஜன: |
முண்டோ3 விருபோ விக்ருத: த3ண்டீ3 தா3ந்தோகு3ணோத்தம: ||

85. நான்கு வேதங்களின் காரணமானவர், தர்மம் முதலிய புருஷார்த்தங்களின் காரணமானவர், திறமையானவர், திறமையுள்ளவர்களை நேசிப்பவர், வேத உருவானவர், வேதத்திற்கே பிரமாணமானவர், தீர்த்தங்களை நேசிப்பவருக்கு நன்மை பயப்பவர்.

86. பலவுருவுடையவர், பூசிக்கத்தகுந்த உருவங்களை கொண்டவர், உலகத்தையே தன்னுருவாக்கிக்கொண்டவர், லக்ஷ்மியை (செல்வத்தை) நிலைபாகக்கொண்டவர், நீதியை ஆதரிப்பவர், நீதியின் உரு, நீதியினால் அறியப்படுபவர், மாயை நீங்கியவர்.

87. கணக்கற்ற தலைகளுடையவர், பரமேச்வரர், எல்லா ஆயுதங்களையும் அழிக்க வல்லவர், (விரத காலத்தில்) மொட்டை தலையுடையவர், மிகச்சிறந்த ருபமுடையவர், சிறந்த செயல் புரிபவர், காலதண்டத்தை தரித்தவர், புலனடக்கியவர், சிறந்த குணங்களின் காரணமானவர்,

पिङ्गलाक्षोऽथ हर्यक्षः नीलग्रीवो निरामयः ।
सहस्रबाहुः सर्वेशः शरण्यः सर्वलोकभृत् ॥ ८८ ॥

पद्मासनः परंज्योतिः परावरपरंफलः ।
पद्मगर्भो महागर्भः विश्वगर्भो विचक्षणः ॥ ८९ ॥

परावरज्ञो बीजेशः सुमुखः सुमहास्वनः ।
देवासुरगुरुः देवः देवासुरनमस्कृतः ॥ ९० ॥

88. பிங்க3லாக்ஷோத2 ஹர்யக்ஷ: நீலக்3ரீவோ நிராமய: |
ஸஹஸ்ரபா3ஹு: ஸர்வேஶ: ஶரண்ய: ஸர்வலோகப்4ருத் ||

89. பத்3மாஸந: பரம்ஜ்யோதி: பராவரபரம்ப2ல: |
பத்3மக3ர்போ4 மஹாக3ர்ப4: விஶ்வக3ர்போ4 விசக்ஷண: ||

90. பராவரக்3ஞோ பீ3ஜேஶ: ஸுமுக2: ஸுமஹாஸ்வந: |
தே3வாஸுரகு3ரு: தே3வ: தே3வாஸுரநமஸ்க்ருத: ||

88. பழுப்புநிறக் கண்களையுடையவர், ஸமர்ப்பிக்கப்பட்ட மகாவிஷ்ணுவின் கண்ணையுடையவர், கருத்த கழுத்துடையவர், வியாதிகளை போக்கவல்லவர், கணக்கற்ற கைகளுடன் யாவரையும் ஆளுபவர், சரணமடையத்தக்கவர், எல்லா லோகங்களையும் தரிப்பவர்.

89. இதயகமலத்தில் வீற்றிருப்பவர், மிகச்சிறந்த ஒளி, சிறந்த மோக்ஷமாகிற பலனைக் கொடுப்பவர், உலகத்தையே தன் வீரியத்திலிருந்து உண்டுபண்ணியவர், பூசிக்கத் தகுந்த விராட் உருவம் கொண்டவர், உலகத்தையே தன்னுள் அடக்கியவர், விசேஷமான செயல்களை புரிபவர்.

90. வருங்காலமும் நடப்பவையும் அறிந்தவர், அகங்காரத்தை அடக்குபவர், மங்கள த்வனியுடன் கூடிய விநாயகர் உருவானவர், தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் போதித்துக்கொண்டு லீலை புரிபவர், தேவராலும் அசுரர்களாலும் வணங்கப் பட்டவர்.

देवासुरमहामात्रः देवासुरमहाश्रयः ।
देवादिदेवो देवर्षिदेवासुरवरप्रदः ॥ ९१ ॥

देवासुरेश्वरो दिव्यः देवासुरमहेश्वरः ।
सर्वदेवमयोऽचिन्त्यः देवतात्मात्मसंभवः ॥ ९२ ॥

ईड्योऽनीशः सुरव्याघ्रः देवसिंहः दिवाकरः ।
विबुधाग्रवरश्रेष्ठः सर्वदेवोत्तमोत्तमः ॥ ९३ ॥

91. தே3வாஸுர மஹாமாத்ர: தே3வாஸுர மஹாஶ்ரய: |
தே3வாதி3 தே3வோ தே3வர்ஷி தே3வாஸுர வரப்ரத3: ||

92. தே3வாஸுரேஶ்வரோ தி3வ்ய; தே3வாஸுர மஹேஶ்வர: |
ஸர்வதே3வ மயோऽசிந்த்ய: தே3வதாத்மாத்ம ஸம்ப4வ: ||

93. ஈட்3யோ ऽநீஶ: ஸுரவ்யாக்4ர: தே3வஸிம்ஹ: தி3வாகர: |
விபு3த4ாக்3ரவர ஶ்ரேஷ்ட2: ஸர்வ தே3வோத்தமோத்தம: ||

91. தேவர்கள் அசுரர்கள் போன்று மதம் பிடித்தவர்களை அடக்குபவர், தேவாசுரர்கள் அண்டும் இடம், பிரும்மா முதலிய முத்தேவர்கட்கும் காரணம், புலன்களுக்கு அப்பாற்பட்டவராக இருந்துகொண்டு தேவாசுரர்களுக்கு வேண்டும் வரமளிப்பவர்.

92. தேவாசுரர்களுக்கு ஆளும் சக்தியை கொடுத்தவர், மாறுதல் அற்றவர், தேவாசுரர்களின் தலைவர், எல்லா தேவர்களையும் உடல் உறுப்புகளாகக் கொண்டவர், மகாவிஷ்ணுவினால் எப்பொழுதும் மனதால் நினைக்கப்படுபவர், பார்வதி முதலிய தேவதைகளை தன்னுருவாகக் கொண்டவர், உயிரினங்களின் உற்பத்தி ஸ்தானம்.

93. துதிக்கத்தகுந்தவர், தலைவனற்றவர், தேவர்களில் சிறந்தவர், தேவர்களில் சிங்கம் போன்றவர், சூரியனானவர், இந்திரனைவிட சிறந்த பிரஜாபதிகளைவிட சிறந்தவர், ப்ரும்மாதி தேவர்களில் மிகச் சிறந்தவர்.

शिवज्ञानरतः श्रीमान् शिखिश्रीपर्वतप्रियः ।
जयस्तंभो विशिष्टम्भः नरसिंहनिपातनः ॥ ९४ ॥

ब्रह्मचारी लोकचारी धर्मचारी धनाधिपः ।
नन्दी नन्दीश्वरः नग्नः नग्नव्रतधरः शुचिः ॥ ९५ ॥

लिङ्गाध्यक्षः सुराध्यक्षः युगाध्यक्षः युगावहः ।
स्ववशः सवशः स्वर्गस्वरः स्वरमयस्वनः ॥ ९६ ॥

94. ஶிவக்[3]ஞானரத: ஸ்ரீமான் ஶிகி[2] ஸ்ரீபர்வதப்ரிய: |
ஜயஸ்தம்போ[1] விஶிஷ்டம்ப[4]: நரஸிம்ஹநிபாதன: ||

95. ப்[3]ரம்ஹசாரீ லோகசாரீ த[4]ர்மசாரீ த[4]னாதி[4]ப: |
நந்தீ[3] நந்தீ[3]ஶ்வர: நக்[3]ந: நக்[3]நவ்ரதத[4]ர. ஶுசி: ||

96. லிங்கா[3]த்[4]யக்ஷ: ஸுராத்[4]யக்ஷ: யுகா[3]த்[4]யக்ஷ: யுகா[3]வஹ: |
ஸ்வவஶ: ஸவஶ: ஸ்வர்க்க[3]ஸ்வர: ஸ்வரமய ஸ்வன: ||

94. சிவனுருவாகி ஞானத்தில் ஈடுபடுபவர்களுக்கு காரணமானவர், செல்வம் நிறைந்தவர், குமரனின் பொருட்டு ஸ்ரீபர்வதத்தை நேசிப்பவர், வெற்றித்தூண் போன்றவர், சிறந்த கங்கை நீரை கொண்டவர், (சரப உருவில்) நரசிம்ம அவதாரத்தை வீழ்த்தியவர்.

95. பரம்பொருளில் ஈடுபட்டவர், யாவுலகிலும் சஞ்சரிப்பவர், தர்மத்தை கடைபிடிப்பவர், எல்லா செல்வத்திற்கும் அதிபர், கல்வடிவில் உள்ளவர், நந்தியின் தலைவர், ஆடையற்றவர். அவதூதர்களின் தவத்தின் குறிக்கோளாக உள்ளவர், அசுத்தமற்றவர்.

96. பாணலிங்கங்களில் பிரத்யக்ஷமாக இருப்பவர், தேவர்களின் பிரபு, யுகங்களின் தலைவர், யுகங்களை அந்தந்த உரிய காலங்களில் ஏற்படுத்துபவர், சுதந்திரர், புலனடக்கம் கொண்டவர், ஸ்வர்க்கத்தின் மூச்சுக் காற்றானவர், ஏழு ஸ்வரங்களின் ஒலிவடிவானவர்.

बीजाध्यक्षो बीजकर्ता धनकृत् धर्मवर्धनः ।
दम्भोऽदम्भो महादम्भः सर्वभूतमहेश्वरः ॥ ९७ ॥

श्मशाननिलयः तिष्यः सेतुः अप्रतिमाकृतिः ।
लोकोत्तरस्फुटालोकः त्र्यंबकः नागभूषणः ॥ ९८ ॥

अन्धकारिः मखद्वेषी विष्णुकंधरपातनः ।
वीतदोषः अक्षयगुणः दक्षारिः पूषदन्तहृत् ॥ ९९ ॥

97. பீ$^{3}$ஜாத்$^{4}$யக்ஷோ பீ$^{3}$ஜகர்த்தா த$^{4}$னக்ருத் த$^{4}$ர்மவர்த்த$^{4}$ன |
த$^{3}$ம்பே$^{4}$ாऽதம்போ$^{4}$ மஹாத$^{3}$ம்ப$^{4}$: ஸர்வபூ$^{4}$த மஹேஶ்வர: ||

98. ஶ்மஶான நிலய: திஷ்ய: ஸேது: அப்ரதிமாக்ருதி: |
லோகோத்தரஸ்புடாலோக: த்ர்யம்ப$^{3}$க: நாக$^{3}$பூ$^{4}$ஷண: |

99. அந்த$^{4}$காரி: மக$^{2}$த்$^{3}$வேஷீ விஷ்ணுகந்த$^{4}$ர பாதன: |
வீததோ$^{3}$ஷ: அக்ஷயகு$^{3}$ண: த$^{3}$க்ஷாரி: பூஷ த$^{3}$ந்தஹ்ருத் ||

97. வீரியத்தின் தலைவர், வீரியத்தை உண்டுபண்ணுபவர், செல்வத்தை கொடுத்து அறம் வளர்ப்பவர். (பக்தரை பரீட்சை செய்ய) கபடமே உருவானவர், கபடற்றவர், மிகப்பூசிக்கத்தக்க கபடமும் உடையவர், யாவருக்கும் தலைவர்.

98. பெரும் பிரளயத்தையும் அழிப்பவர், பூமியின் வடிவு, சம்சாரக்கடலில் பாலம் போன்றவர், உவமையற்ற உருவம் படைத்தவர், கண்களுக்கு எட்டாத ஆன்ம ஒளியானவர், முக்கண்ணர், நாகங்களை அணிகளாகக் கொண்டவர்.

99. அந்தகாசுரனை அழித்தவர், தக்ஷரின் வேள்வியை வெறுத்தவர், (சரப உருவில்) விஷ்ணுவின் கழுத்தை வீழ்த்தியவர், தோஷமற்றவர், அழிவற்ற 32 குணங்கள் படைத்தவர், தக்ஷனின் எதிரி, சூரியனின் பல்லை உடைத்தவர்.

धूर्जटिः खण्डपरशुः सकलो निष्कलोऽनघः ।
आधारः सकलाधारः पाण्डुराभो मृडो नटः ॥ १०० ॥

पूर्णः पूरयिता पुण्यः सुकुमारः सुलोचनः ।
सामगेयः प्रियकरः पुण्यकीर्तिः अनामयः ॥ १०१ ॥

मनोजवः तीर्थकरः जटिलो जीवितेश्वरः ।
जीवितान्तकरो नित्यः वसुरेता वसुप्रियः ॥ १०२ ॥

100. தூ[4]ர்ஜடி: க[2]ண்ட[3]பரஶு: ஸகலோநிஷ்கலோऽநக[4]:
ஆத[4]ார: ஸகலாத[4]ார: பாண்டு[3]ராபோ[4] ம்ருடோ[3] நட:

101. பூர்ண: பூரயிதா புண்ய: ஸுகுமார; ஸுலோசன: |
ஸாமகே[3]ய: ப்ரியகர: புண்யகீர்த்தி: அநாமய:||

102. மனோஜவ: தீர்த்த[3]கர: ஜடிலோ ஜீவிதேஸ்வர: |
ஜீவிதாந்தகரோ நித்ய: வஸுரேதா வஸுப்ரிய: ||

100. சிறந்த சடையுடையவர், யாவமற்றையும் வெட்டக்கூடிய கோடரியை தரித்தவர், சந்திர கலை தரித்தவர், சுத்தமானவர், பாவமற்றவர், யாவற்றிற்கும் அடிவாரமாக உள்ளவர், எல்லா ஆதாரஸ்தானங்களுக்கும் உற்பத்திஸ்தானம், சோபை வாய்ந்த பெருமையுடையவர், சுகமளிப்பவர், பல உருக்கொண்டவர்.

101. ஐசுவரியம் போன்ற சக்திகள் நிறைந்தவர், பக்தரின் ஆசைகளை நிறைவேற்றுபவர், பாவங்களை போக்க வல்லவர், கந்தனை நல்மகனாக அடைந்தவர், நல்ல கண்களுடையவர், சாமகானத்தினால் துதிக்கத் தகுந்தவர், அன்பு செலுத்துபவர், பாவங்களை நீக்குவதில் புகழ் பெற்றவர், பெயரினாலோ சொல்லினாலோ விளக்கப்பட முடியாதவர்.

102. மனதால் அடைய முடியாதவர், தீர்த்தங்களுக்கு மகிமை அளிப்பவர், சடைமுடியர், உயிர் நிலையானவர், உயிரை அழிப்பதற்கும் காரணமானவர், சம்ஸார பந்தத்தை நீக்குபவர், பொன்னை வீரியமாகக்கொண்டவர், குபேரனை நேசிப்பவர்.

सद्गतिः सत्कृतिः सक्तः कालकण्ठः कलाधरः ।
मानी मान्यो महाकालः सद्भूतिः सत्परायणः ॥ १०३ ॥

चन्द्रसञ्जीवनः शास्ता लोकगूढः अमराधिपः ।
लोकबन्धुः लोकनाथः कृतज्ञः कृतिभूषणः ॥ १०४ ॥

अनपायी अक्षरः कान्तः सर्वशास्त्रभृतां वरः ।
तेजोमयः द्युतिधरः लोकमायोऽग्रणीरणुः ॥ १०५ ॥

103. ஸத்'க³தி ஸத்க்ருதி: ஸக்த: காலகண்ட²: கலாத⁴ர: |
மானீ மான்யோ மஹாகால ஸத்³பூ⁴தி: ஸத்பராயண: ||

104. சந்த்³ரஸஞ்ஜீவன: ஶாஸ்தா லோககூ³ட⁴: அமராதி⁴ப: |
லோகப³ந்து⁴: லோகநாத² க்ருதக்ஞ: க்ருதி பூ⁴ஷண: ||

105. அநபாயீ அக்ஷர: காந்த: ஸர்வஶாஸ்த்ரப்⁴ருதாம் வர: |
தேஜோமய: த்³யுதி த⁴ர: லோகமாயோக்³ரணீரணு:||

103. ஸ்திரமான போக்கை கொடுப்பவர், புகழ் வாய்ந்த செயல்களை புரிபவர், பார்வதி தேவியை நேசிப்பவர், மகாகாலனை அருகில் வைத்திருப்பவர், 64 கலைகளை தாங்குபவர், நித்தியமான மதிப்புடன் கூடியவர், பெருமதிப்பிற்கு உரியவர், அளவற்ற காலத்தை உடையவர், சிறந்த மேன்மைகளை கொடுப்பவர், நல்லோருக்கு சிறந்த உறைவிடம்.

104. சந்திரனின் க்ஷயரோகத்தை நீக்கியவர், அடக்கியாண்டுகொண்டு கண்ணுக்கு புலப்படாமல் இருப்பவர், தேவர் தலைவர், பிராணிகளின் உறவினர், 14 உலகங்களின் தலைவர், நற்பணிகளை அறிந்துகொண்டு பக்தரின் தன்முயற்சிக்கு பலனளிப்பவர்.

105. அழிவற்ற வேத உருவானவர், யமனுக்கும் அழிவைத் தருபவர், சாஸ்திரங்களை பாதுகாப்பவர்களில் சிறந்தவர், ஒளிமயமாக இருந்துகொண்டு ஒளியை தாங்குபவர், தன் மாயையினால் உலகை தோற்றுவிப்பவர், பக்தர்களை சிறந்த இடத்திற்கு அழைத்துச்செல்பவர், மிக நுட்பமானவர்.

शुचिस्मितः प्रसन्नात्मा दुर्जयः दुरतिक्रमः ।
ज्योतिर्मयः निराकारः जगन्नाथो जलेश्वरः ॥ १०६ ॥

तुम्बवीणी महाकायः विशोकः शोकनाशनः ।
त्रिलोकात्मा त्रिलोकेशः शुद्धः शुद्धिरथाक्षजः ॥ १०७ ॥

अव्यक्तलक्षणोऽव्यक्तः व्यक्ताव्यक्तः विशाम्पतिः ।
वरशीलो वरतुलः मानो मानधनो मयः ॥ १०८ ॥

106. ஶுசிஸ்மித: ப்ரஸன்னாத்மா து$^3$ர்ஜய: து$^3$ரதிக்ரம: |
ஜ்யோதிர்மய: நிராகார: ஜக$^3$ன்னாதே$^2$ா ஜலேஶ்வர: ||

107. தும்ப$^3$வீணீ மஹாகாய: விஶோக: ஶோக நாசன: |
த்ரிலோகாத்மா த்ரிலோகேஶ: ஶுத்த$^4$: ஶுத்தி$^4$ ரத$^2$ாக்ஷஜ: ||

108. அவ்யக்த லக்ஷணோs வ்யக்த: வ்யக்தாவ்யக்த: விஶாம்பதி: ||
வரஶீலோ வரதுல: மானோ மானத$^4$னோ மய: ||

106. சுத்தமான சிரிப்புடையவர், த்ருப்தியடைந்த மனமுடையவர், வெல்ல முடியாதவர், சிரமப்பட்டுகூட மீற முடியாதவர், சோதிலிங்க வடிவினர், உருவமற்றவர், உலகத்தின் நாயகர். எல்லா தீர்த்தங்களுக்கும் தலைவர்.

107. சுரைக்காய்களால் ஆகிய வீணை (ருத்ர வீணை) யுடையவர், பூசிக்கத்தக்க உருவம் கொண்டவர், துக்கமற்றவர், துன்பத்தை நீக்குபவர், மூவுலகையும் தன்னுடலாக கொண்டவர் மூவுலகின் தலைவர், பாவமற்றவர், பரிசுத்தத் தன்மையானவர் சுதர்சன சக்கிரத்தை உண்டாக்கியவர்.

108. தெளிவற்ற லக்ஷணங்கள் கொண்டவர், மகாவிஷ்ணுவை தோற்றியவர், தெரிந்தும் தெரியாமலும் இருப்பவர், பிரஜைகளை காப்பவர், சிறந்த நடத்தையுடையவர், சிறந்த எடையுள்ளவர், எல்லோருக்கும் ப்ரமாணமாக உள்ளவர், கௌரவிப்பவருக்கு செல்வம் அளிக்கும் ஆனந்த ரூபமானவர்.

ब्रह्मा विष्णुः प्रजापालः हंसो हंसगतिर्यमः ।
वेधा धाता विधाता च अत्ता हर्ता चतुर्मुखः ॥ १०९ ॥

कैलासशिखरावासी सर्वावासी सतां गतिः ।
हिरण्यगर्भो हरिणः पुरुषः पूर्वजः पिता ॥ ११० ॥

भूतालयो भूतपतिः भूतिदः भुवनेश्वरः ।
संयोगी योगवित् ब्रह्मा ब्रह्मण्यः ब्राह्मणप्रियः ॥ १११ ॥

109. ப்³ரம்ஹா விஷ்ணு: ப்ரஜாபால: ஹம்ஸோ ஹம்ஸக³திர் யம:
வேதா⁴ தா⁴தா விதா⁴தா ச அத்தா ஹர்த்தா சதுர்முக²:||

110 கைலாஸ ஶிக²ராவாஸீ ஸர்வாவாஸீ ஸதாம் க³தி: |
ஹிரண்ய க³ர்போ⁴ ஹரிண: புருஷ: பூர்வஜ: பிதா |

111. பூ⁴தாலயோ பூ⁴தபதி: பூ⁴தித³: பு⁴வனேஶ்வர: ||
ஸம்யோகீ³ யோக³வித் ப்³ரம்ஹா ப்³ரம்ஹண்ய: ப்³ராம்ஹணப்ரிய:

109. பிரமனின் உருவானவர், எங்கும் வியாபித்து நின்று பிரஜைகளை காப்பவர், அக்ஞானத்தை அழிக்கும் பரமாத்மா, யோகங்களுக்கு புகலிடம், அஹிம்ஸை முதலிய கட்டுப்பாட்டின் உருவானவர், யாவற்றிற்கும் அடிப்படையானவர்' உலகை காப்பவர், பிரும்மாண்டத்தை காப்பவர், உலகை உண்டு அழிப்பவர், நான்முகர் வடிவானவர்.

110. கைலையின் உச்சியில் வஸிப்பவர், எங்கும் நிறைந்தவர். நல்லோருக்கு வழி போன்றவர், பொன்னை தோற்றுவிப்பவர், வெண்ணிறமானவர், சாங்கிய புருஷர், எல்லோருக்கும் முன்தோன்றி தந்தையானவர்.

111. பூதம் என்ற பெயர்கொண்ட காட்டில் இருப்பவர், ஆகாயம் முதலிய ஐந்து தத்துவங்களையும் காப்பவர், ஐசுவரியமளிப்பவர், உலகின் தலைவர்களை தோற்றியவர் வினைப்பயனை உரிய இடத்தில் சேர்ப்பவர், எல்லா உபாயங்களுமறிந்த பிரமனுக்கு காரணமானவர், தவம் செய்ய உதவி புரிபவர், (பரம் பொருளை உபாஸிக்கும்) அந்தணரை நேசிப்பவர்.

देवप्रियः देवनाथः देवज्ञः देवचिंतकः ।
विषमाक्षः कलाध्यक्षः वृषाङ्को वृषवर्धनः ॥ ११२ ॥

निर्मदो निरहङ्कारः निर्मोहः निरुपद्रवः ।
दर्पहा दर्पितो दृप्तः सर्वर्तुपरिवर्तकः ॥ ११३ ॥

सप्तजिह्वः सहस्रार्चिः स्निग्धः प्रकृतिदक्षिणः ।
भूतभव्यभवन्नाथः प्रभवः भ्रान्तिनाशनः ॥ ११४ ॥

112. தே³வப்ரிய: தே³வநாத²: தே³வக்³ஞ: தே³வசிந்தக: |
விஷமாக்ஷ: கலாத்⁴யக்ஷ: வ்ருஷாங்கோ வ்ருஷவர்த⁴ன: ||

113. நிர்மதோ³ நிரஹங்கார: நிர்மோஹ: நிருபத்³ரவ: |
த³ர்பஹா த³ர்பிதோ த்³ருப்த: ஸர்வர்து பரிவர்தக:* ||

114. ஸப்த ஜிஹ்வ: ஸஹஸ்ரார்ச்சி: ஸ்நிக்³த⁴: ப்ரக்ருதி த³க்ஷிண: ||
பூ⁴தப⁴வ்ய ப⁴வன் நாத²: ப்ரப⁴வ: ப்⁴ராந்தி நாஶன: ||
[* ஸர்வ து³க்க³ நிவர்த்தக : என்று ஒரு பாடமும் உண்டு]

112. தேவர்களை நேசிப்பவர், தேவர்களின் தலைவர், தேவருக்கு ஞானமளிப்பவர் தேவர்களால் தியானம் செய்யப்படுபவர், முக்கண்ணர், 64 கலைகளின் தலைவர், தர்மத்தை அணிகலமாகக் கொண்டவர், அறம் வளர்ப்பவர்.

113. கர்வத்தை நீக்கி அகங்காரத்தை ஒழிப்பவர், துக்கத்தை நீக்குபவர், தொல்லைகளை நீக்குபவர், கர்வத்தை அழிப்பவர், என்றும் மன நிறைவு உள்ளவர், ஆன்ம சுகத்தையனுபவிப்பதால் என்றும் சந்தோஷமாக இருப்பவர், வஸந்தம் போன்ற காலநிலை (ருதுக்கள்) களை மாற்றி மாற்றி செயல்பட வைப்பவர்.

114. ஏழு நாக்குகள் படைத்த அக்னி தேவரானவர், எண்ணற்ற ஒளிக்கதிர்கள் உடையவர், கருணை நிறைந்தவர், இயற்கையாகவே சரளமானவர், கடந்த காலம் வருங்காலம், நிகழ்காலம் இவற்றின் தலைவர், சம்ஸாரத்தின் காரணமானவர், சரீரத்தை ஆன்மாவாக நினைக்கும் தவறான மனப்பான்மையை நீக்குபவர்.

अर्थः अनर्थः महाकोशः परकार्यैकपण्डितः ।
निष्कण्टकः कृतानन्दः निर्व्याजः व्याजमर्दनः ॥ ११५ ॥

सत्त्ववान्सात्त्विकः सत्यकीर्तिस्तम्भकृतागमः ।
अकम्पितः गुणग्राही नैकात्मा नैककर्मकृत् ॥ ११६ ॥

सुप्रीतः सुमुखः सूक्ष्मः सुकरः दक्षिणोऽनलः ।
स्कन्धः स्कन्धधरोधुर्यः प्रकटः प्रीतिवर्धनः ॥ ११७ ॥

115. அர்த்த²: அநர்த்த²; மஹாகோஶ: பரகார்யைகபண்டி³த: |
நிஷ்கண்டக க்ருதாநந்த³: நிர்வ்யாஜ: வ்யாஜ மர்த³ன ||

116. ஸத்வவான் ஸாத்விக: ஸத்ய கீர்த்தி ஸ்தம்ப⁴க்ருதாக³ம:
அகம்பித: கு³ணக்³ராஹீ நைகாத்மா நைக கர்மக்ருத்.|

117. ஸுப்ரீத: ஸுமுக³: ஸூக்ஷ்ம: ஸுகர:, த³க்ஷிணோऽனல: |
ஸ்கந்த⁴: ஸ்கந்த⁴ த⁴ரோது⁴ர்ய: ப்ரகட; ப்ரீதி வர்த்த⁴ன: ||

115. வேண்டப்படுபவர், பூர்ணகாமர் (வெளி ஆசையற்றவர்), அளவற்ற செல்வம் வழங்குபவர், முக்தி தருவதில் ஒப்பற்ற திறன் வாய்ந்தவர், காமம், கோபம் போன்ற சத்ருக்களை அழிப்பவர், இடைவிடாமல் ஆனந்தத்தை கொடுப்பவர். சூதில்லாதவர், சூது (கபடம்) அழிப்பவர்.

116. சூரத்தனம் வீர்யம் இவை பொருந்தியவர், சத்வகுணம் நிறைந்தவர், வேதத்தை உண்மையின் புகழ்க்கொடி மரமாகக் கொண்டவர், சலனமற்றவர், பக்தரின் குணங்களை கிரகிப்பவர். எல்லா உயிரினங்களின் உருவங்களிலும் இருந்து கொண்டு பல்வேறு செயல்களை புரிபவர்.

117. நன்கு சந்தோஷமடைபவர், சம்ஸாரத்திலிருந்து நன்கு வீடுவிப்பவர், யாவற்றிலும் நுட்பமாக இருப்பவர், வேண்டியதை கொடுக்கும் கைகள் படைத்தவர், உயிர் (பிரியும்கால்) ஜீவன் போவதற்கு வலது வழியாக உள்ளவர், தானே தனக்கு ஆபரணமாகயிருப்பவர், தத்துவக்கூட்ட உருவில் இருந்துகொண்டு தத்துவக் கூட்டங்களை தாங்குபவர், பிராணிகளின் சிருஷ்டி முதலிய பாரத்தை வகிப்பவர். சூரிய வடிவில் பிரத்யக்ஷமானவர், பக்தர்களின் அன்பை வளர்ப்பவர்.

अपराजितः सर्वसहः विदग्धः सर्ववाहनः ।
अधृतः स्वधृतः साध्यः पूर्तमूर्तिर्यशोधरः ॥ ११८ ॥

वराहशृङ्गधृक् वायुः बलवान् एकनायकः ।
श्रुतिप्रकाशः श्रुतिमान् एकबन्धुः अनेकधृक् ॥ ११९ ॥

श्रीवल्लभशिवारम्भः शान्तभद्रः समञ्जसः ।
भूशयो भूतिकृत् भूतिः भूषणः भूतवाहनः ॥ १२० ॥

118. அபராஜித: ஸர்வஸஹ: வித்$^3$க்$^3$த$^1$: ஸர்வவாஹந: |
அத்$^4$ருத: ஸ்வத்$^4$ருத: ஸாத்$^4$ய: பூர்த மூர்திர்யஶோ த$^4$ர: |

119. வராஹஶ்ருங்க$^3$த்$^4$ருக் வாயு: ப$^3$லவான் ஏக நாயக
ஶ்ருதி ப்ரகாஶ: ஶ்ருதிமான் ஏகப$^3$ந்து$^4$: அநேகத்$^4$ருக் ||

120. ஸ்ரீவல்லப$^4$ஶிவாரம்ப$^4$: ஶாந்தப$^4$த்$^3$ர: ஸமஞ்ஜஸ: |
பூ$^4$ஶயோ $^4$பூதிக்ருத் $^4$பூதி: பூ$^4$ஷண: பூ$^4$தவாஹந: ||

118. தோல்வியற்றவர், யாவற்றையும் பொறுத்துக்கொள்பவர், வேறற்றுப்போக பொசுக்கும் ஞானத்திக்கு காரணமானவர், யாவும் அளிப்பவர், வேறு ஒரு அடிப்படையும் இல்லாதவர், தன்னைத்தானே தாங்குபவர், அடைவதற்கு தகுதியுள்ளவர், கிணறு, குளம் வெட்டுவது போன்ற பூர்த்த காரியங்களின் உருவானவர், புகழ் தாங்குபவர்.

119. வராஹ உருவில் தத்திப்பல் கொண்டவர், வாயு உருவானவர், வலிவுள்ளவர். மிகச் சிறந்த தலைவர், வேதத்தினுல் பிரகாசமடைபவர், வேதத்துடன் கூடியவர், பதிலுதவி எதிர்பாராமல் உதவி புரிபவர், பல பக்தர்களை தேர்ச்சி பெறச் செய்பவர்.

120. ஸ்ரீமகாவிஷ்ணுவின் மங்களத் தோற்றத்துக்கு காரணமானவர், சாந்தமானவர்களுக்கு நன்மை பயப்பவர், நன்கு உண்மையை உள்ளபடி அறிந்தவர், பூமியை படுக்கையாகக் கொண்டவர், எல்லா ஐச்வரியங்களையும் கொடுக்கும் ஆற்றல் படைத்தவர்களுக்கு காரணமானவர், யாவரையும் அலங்கரிப்பவர், பூதங்களை வாகனங்களாக உடையவர்.

अकायो भक्तकायस्थः कालज्ञानी कलावपुः ।
सत्यव्रतमहात्यागी निष्ठाशान्तिपरायणः ॥ १२१ ॥

परार्थवृत्तिः वरदः विविक्तः श्रुतिसागरः ।
अनिर्विण्णो गुणग्राही कलङ्काङ्कः कलङ्कहा ॥ १२२ ॥

स्वभावरुद्रो मध्यस्थः शत्रुघ्नो मध्यनाशकः ।
शिखण्डी कवची शूली चण्डी मुण्डी च कुण्डली ॥ १२३ ॥

121. அகாயோ ப4க்த காயஸ்த்த2: காலக்ஞானி கலாவபு: |
ஸத்யவ்ரத மஹாத்யாகி3 நிஷ்2டாஶாந்தி பராயண: ||

122. பரார்த்த2வ்ருத்தி: வரத3: விவிக்த: ஶ்ருதிஸாக3ர: |
அநிர்விண்ணோ கு3ணக்3ராஹீ கலங்காங்க: கலங்கஹா ||

123. ஸ்வபா4வருத்3ர: மத்4யஸ்த2: ஶத்ருக்4னோ மத்4ய நாஶக: |
ஶிக2ண்டீ கவசீ ஶூலீ சண்டீ3 முண்டீ3 ச குண்ட3லீ ||

121 உடலற்றவர், பக்தரின் இதய கமலத்தில் வீற்றிருப்பவர், காலமறிந்தவர், ஸம்ஸார ஸமுத்ரத்தை கடக்க தோணி போன்றவர், ஸத்யத்தை கடைபிடித்து வருபவர்களில் சிறந்த தியாகி, மரணம் வரை சாந்தியே இருப்பிடமாகக் கோண்டவர்

122. முக்தி தருவதையே தொழிலாகக்கொண்டவர், ஞானத்தை மறைக்கும் மாயையின் தோற்றங்களை அழிப்பவர், ஜடமான உலகிலிருந்து தனிப்பட்டு நிற்பவர், வேதமாகிற கடலின் கரை கடந்தவர், உலகின் ஸ்ருஷ்டியில் எப்பொழுதும் ஈடுபட்டவர் தன் குணங்களினால் பக்தர்களை தன்வயப்படுத்துபவர், சந்திர வடிவினர், களங்கத்தை நீக்குபவர்

123. அஞ்ஞானத்தை நீக்கும் குணமுடையவர், பிரும்மா விஷ்ணுவின் இடையில் இருப்பவர், எதிரிகளை கொன்று பெரும்பதம் அளிப்பவர், ருத்ரரின் உருவில் உலகை சம்ஹாரம் செய்பவர்; அடர்ந்த கேசமுடையவர், பொன் கவசமணிந்தவர், சூலமேந்தியவர், சண்டர் என்ற கணத்துடன் கூடியவர், மொட்டைத்தலையுடனுள்ள கணங்களுடன் கூடியவர், பாம்பை காதணியாக கொண்டவர்

मेखली कवची खड्गी मायी संसारसारथिः ।
अमृत्युः सर्वदृक् सिंहः तेजोराशिः महामणिः ॥ १२४ ॥

असंख्येयः अप्रमेयात्मा वीर्यवान् कार्यकोविदः ।
वेद्यो वेदार्थवित् गोप्ता सर्वाचारो मुनीश्वरः ॥१२५ ॥

अनुत्तमो दुराधर्षः मधुरः प्रियदर्शनः ।
सुरेशः शरणं सर्वः शब्दब्रह्म सतां गतिः ॥ १२६ ॥

124. மேக²லீ கவசீ க²ட்³கி³ மாயீ ஸம்ஸார ஸாரதி:² |
அம்ருத்யு: ஸர்வத்³ருக் ஸிம்ஹ. தேஜோராஶி: மஹாமணி: ||

125. அஸங்க்²யேய: அப்ரமேயாத்மா வீர்யவான் கார்ய கோவித³:|
வேத்³யோ வேதா³ர்த்த வித் கோ³ப்தா ஸர்வாசாரோ முனீஶ்வர: |

126. அநுத்தமோ து³ராத⁴ர்ஷ: மது⁴ர: ப்ரியத³ர்ஶன:
ஸுரேஶ: ஶரணம் ஸர்வ: ஶப்³த ப்ரஹ்ம ஸதாம் க³தி: ||

124. இடுப்பில் அரைஞாண் கயிறு கட்டியவர், கொட்டும் போர் பேரிகையுடையவர், சந்திரஹாஸன் என்ற கத்தி ஏந்தியவர், மாயையுடன் இருந்துகொண்டு ஸம்ஸாரத்துக்கு உதவிபுரிபவர், இறப்பற்றவராக இருந்துகொண்டு யாவற்றையும் பார்ப்பவர், ஹிம்சை செய்பவர், ஒளிமயமான கௌஸ்துபம் முதலிய ரத்தினங்களின் உருவானவர்

125. எல்லைகளுக்கு அப்பாற்பட்டவர், அளவிடமுடியாத உடலைக்கொண்டவர், வீர்யம் நிறைந்தவர், எல்லா காரியங்களிலும் நிபுணர், முக்தியை நாடுபவர்களால் அறியத்தக்கவர், வேதத்தின் பொருளறிந்தவர்களை காப்பவர், எல்லா ஆசாரங்களுக்கும் காரணமானவர், முனிவர்களின் தலைவர்

126, புகழப்படுபவர்களில் சிறந்தவர், முற்றுகையிட்டமுடியாதவர், தேன் போன்ற இனிமையை கொடுப்பவர், யாவற்றிலும் சிறந்த ஆன்மாவை காட்டுபவர், தேவர்களை அவரவர் தொழிலில் ஈடுபடுத்துபவர், யாவரையும் காப்பவர், உலகத்தின் உருவானவர், சப்த ப்ரம்மத்தை உபாஸிப்பவர்களுக்கு வழியானவர்,

कालभक्षः कलंकारिः कंकणीकृतवासुकिः ।
महेष्वासो महीभर्ता निष्कलंको विशृंखलः ॥ १२७ ॥

द्युमणिः तरणिः धन्यः सिद्धिदः सिद्धिसाधनः ।
निवृत्तः संवृतः शिल्पो व्यूढोरस्को महाभुजः ॥ १२८ ॥

एकज्योतिः निरातंको नरो नारायणप्रियः ।
निर्लेपो निष्प्रपंचात्मा निर्व्यग्रो व्यग्रनाशनः ॥ १२९ ॥

127. கால ப$^4$க்ஷ: கலங்காரி: கங்கணீக்ருதவாஸுகி: |
மஹேஷ்வாஸோ மஹீப$^4$ர்த்தா நிஷ்கலங்கோ விஶ்ருங்க$^2$ல:

128. த்$^3$யுமணி: தரணி: த$^4$ன்ய: ஸித்$^3$தி$^4$த$^3$: ஸித்$^3$தி$^4$ ஸாத$^4$ன: |
நிவ்ருத்த: ஸம்வ்ருத: ஶில்போ வ்யூடே$^4$ாரஸ்கோ /மஹாபு$^4$ஜ: ॥

129. ஏகஜ்யோதி: நிராதங்கோ நரோ நாராயணப்ரிய: ॥
நிர்லேபோ நிஷ்ப்ரபஞ்சாத்மா நிர்வ்யக்$^3$ரோ வ்யக்$^3$ரநாசந: ॥

127. காலனின் உருவில் உண்பவர், மனிதனின் அழுக்குகளை நீக்குபவர், வாசுகி என்ற சர்ப்பராஜனை கங்கணமாக தரித்தவர், குறைவற்ற அம்பராத்துணி உடையவர், பூமியை தரிப்பவர், அவித்யையை விலக்கியவர், மாயையின் பந்தமற்றவர்

128. ஆகாயத்தில் ரத்தினம் போன்ற சூரியனின் உருவானவர், செய்யவேண்டியதை செய்துமுடித்தவர், அணிமாதி ஸித்திகளை கொடுப்பவர், ஸித்திகளுக்கு உதவுபவர் பிறப்பு பந்தங்களை கொடுப்பவர், மாயையினல் மறைக்கப்பட்டவர், பல பிரும் மாண்டங்களை தோற்றுவிக்கும் ஆற்றல்படைத்தவர், பரந்த மார்புடையவர், நீண்ட கைகளையுடையவர்

129. சின்மயமான (ஞானமயமான) உருவமுடையவர், வியாதிகளற்றவர், நரன் எனும் தர்மபுத்ரரின் உருவாக இருந்துகொண்டு நாராயணனல் நேசிக்கப்படுபவர், கர்மாக் களின் ஸம்பந்தமற்றவர், பஞ்ச பூதங்களின் சேர்க்கையினல் ஆக்கப்படாத உடலையுடையவர், கர்மாக்களின் ஸம்ஸ்காரத்தினல் ஆளப்பட்ட மனதிலிருந்து விடுபட்டவர், காம்ய கர்மாக்களில் ஈடுபட்ட மனதை நாசம் செய்பவர்.

स्तव्यस्तवप्रियः स्तोता व्यासमूर्तिरनाकुलः ।
निरवद्यपदोपायो विद्याराशिरविक्रमः ॥ १३०॥

प्रशान्तबुद्धिः अक्षुद्रः क्षुद्रहा नित्यसुन्दरः ।
धैर्याग्र्यधुर्यो धात्रीशः शाकल्यः शर्वरीपतिः ॥ १३१ ॥

परमार्थगुरुदृष्टिः गुरुः आश्रितवत्सलः ।
रसो रसज्ञः सर्वज्ञः सर्वसत्त्वावलंबनः ॥ १३२ ॥

130. ஸ்தவ்ய: ஸ்தவப்ரிய: ஸ்தோதா வ்யாஸ மூர்த்தி ரஞுகுல: | :।
நிரவத்$^{3}$ய பதோ$^{3}$பாயோ வித்$^{3}$யா ராசி ரவிக்ரம: ॥

131. ப்ரஶாந்த பு$^{3}$த்தி$^{4}$: அக்ஷு த்$^{3}$ர: க்ஷு த்$^{3}$ரஹா: நித்யஸு ந்த$^{3}$ர: | r: ।
தை$^{4}$தர்யாக்$^{3}$ர்ய து$^{4}$ர்யோ த$^{4}$ாத்ரீஶ: ஶாகல்ய: ஶர்வரீபதி: ॥ : ॥

132 பரமார்த்த$^{2}$ குருர் த்ருஷ்டி: குரு: ஆஶ்ரிதவத்ஸல: |
ரஸோ ரஸக்ஞ: ஸாவக்ஞ: ஸர்வஸத்வாவலம்பந: |

130, ஞானிகளின் துதிப்பாடல்களை நேசிப்பவர், துதிக்கும் வியாஸர் போன்ற ரிஷிகளின் உருவங்களானவர், காமம் குரோதம் முதலிய எதிரிகளால் கலங்காதவர், முக்திக்கு சாதனமானவர், எல்லா வித்தைகளுக்கும் காரணமானவர், அருளினுல் மாத்திரம் அடையக்கூடியவர் (பராக்ரமத்தினுல் அல்ல)

131. பக்ஷபாதமற்ற நன்கு அமைதிகொண்ட புத்தியுடையவர், பேத புத்தியுள்ளவர்களை அழிப்பவர், எப்பொழுதும் அழகர், தைரியசாலிகளில் முதல்வர், பூமியின் தலைவர் சாகல்யர் என்ற ரிஷியின் உருவானவர், சந்திரனின் உருவானவர்.

132. முக்தியை உபதேசிக்கும் வேதமாகிற கண்களை கொண்டவர், நன்மையை உபதேசிக்கும் ஆசிரியர், அண்டியவர்களிடம் கருணை கொண்டவர், பிரும்மமாகிற ரஸ உருவானவர், பிரும்மத்தை அறிந்த பக்தர்களின் காரணமானவர், உலகை யாவற்றையும் அறிந்த ஞானிகளுக்கு •காரணமானவர், எல்லா உயிரினங்களுக்கும் புகலிடம்.

# श्री शिवसहस्रनामावलिः

| | | |
|---|---|---|
| ओं | भवाय शिवाय | नमः |
| ,, | हराय रुद्राय | ,, |
| ,, | पुरुषाय | ,, |
| ,, | पद्मलोचनाय | ,, |
| ,, | अर्थितव्याय | ,, |
| ,, | सदाचाराय | ,, |
| ,, | सर्वशम्भुमहेश्वराय | ,, |
| ,, | ईश्वराय | ,, |
| ,, | स्थाणवे | ,, |
| ,, | ईशानाय | 10 |
| ,, | सहस्राक्षाय सहस्रपदे | ,, |
| ,, | वरीयसे | ,, |
| ,, | वरदाय वन्द्याय | ,, |
| ,, | शङ्कराय | ,, |
| ,, | परमेश्वराय | ,, |
| ,, | गङ्गाधराय | ,, |
| ,, | शूलधराय | ,, |
| ,, | परार्थैक प्रयोजनाय | ,, |
| ,, | सर्वज्ञाय | ,, |
| ,, | सर्वदेवादिगिरिधन्वने | 20 |
| ,, | जटाधराय | ,, |
| ,, | चन्द्रापीडाय | ,, |
| ,, | चन्द्रमौलये | ,, |
| ,, | विदुषे | ,, |
| ,, | विश्वामरेश्वराय | ,, |
| ,, | वेदान्तसारसंदोहाय | ,, |
| ,, | कपालिने नीललोहिताय | ,, |
| ,, | ध्यानाधाराय | ,, |
| ,, | अपरिच्छेद्याय | ,, |
| ,, | गौरीभर्त्रे | 30 |
| ओं | गणेश्वराय | नमः |
| ,, | अष्टमूर्तये विश्वमूर्तये | ,, |
| ,, | त्रिवर्गाय | ,, |
| ,, | स्वर्गसाधनाय | ,, |
| ,, | ज्ञानगम्याय | ,, |
| ,, | दृढप्रज्ञाय | ,, |
| ,, | देवदेवाय | ,, |
| ,, | त्रिलोचनाय | ,, |
| ,, | वामदेवाय | ,, |
| ,, | महादेवाय | 40 |
| ,, | पाण्डवे | ,, |
| ,, | परिदृढाय | ,, |
| ,, | अदृढाय | ,, |
| ,, | विश्वरूपाय | ,, |
| ,, | विरूपाक्षाय | ,, |
| ,, | वागीशाय | ,, |
| ,, | शुचये | ,, |
| ,, | अन्तराय | ,, |
| ,, | सर्वप्रणयसंवादिने | ,, |
| ,, | वृषाङ्काय | 50 |
| ,, | वृषवाहनाय | ,, |
| ,, | ईशाय पिनाकिने | ,, |
| ,, | खट्वाङ्गिने | ,, |
| ,, | चित्रवेषाय | ,, |
| ,, | चिरन्तनाय | ,, |
| ,, | तमोहराय | ,, |
| ,, | महायोगिने गोप्त्रे | ,, |
| ,, | ब्रह्माङ्गहृज्जटिने | ,, |
| ,, | कालकालाय | ,, |
| ,, | कृत्तिवाससे | 60 |

ओं सुक्षणाय नमः
,, प्रणवात्मकाय ,,
,, उन्मत्तवेषाय ,,
,, चक्षुष्याय ,,
,, दुर्वाससे ,,
,, स्मरशासनाय ,,
,, दृढायुधाय स्कन्दगुरवे ,,
,, परमेष्ठिने परायणाय ,,
,, अनादिमध्यनिधनाय ,,
,, गिरिशाय गिरिबान्धवाय 70

,, कुबेरबन्धवे श्रीकण्ठाय ,,
,, लोकवर्णोत्तमोत्तमाय ,,
,, सामान्यदेवाय ,,
,, कोदण्डिने ,,
,, नीलकण्ठाय ,,
,, परश्वधिने ,,
,, विशालाक्षाय ,,
,, मृगव्याधाय ,,
,, सुरेशाय ,,
,, सूर्यतापनाय 80

,, धर्मकर्माक्षमाय ,,
,, क्षेत्राय भगवते ,,
,, भृगनेत्रभिदे उग्राय ,,
,, पशुपतये ,,
,, तार्क्ष्यप्रियभक्ताय ,,
,, प्रियंवदाय ,,
,, दान्तोदयाकराय ,,
,, दक्षाय ,,
,, कपर्दिने ,,
,, कामशासनाय 90

,, श्मशाननिलयाय सूक्ष्माय ,,
,, श्मशानस्थाय ,,
,, महेश्वराय ,,
,, लोककर्त्रे ,,
,, भूतपतये ,,

ओं महाकर्त्रे नमः
,, महौषधिने ,,
,, उत्तराय ,,
,, गोपतये ,,
,, गोप्त्रे 100

,, ज्ञानगम्याय ,,
,, पुरातनाय ,,
,, नीतये ,,
,, सुनीतये ,,
,, शुद्धात्मने ,,
,, सोमसोमरताय ,,
,, सुखिने ,,
,, सोमपाय ,,
,, अमृतपाय ,,
,, सोमाय 110

,, महानीतये ,,
,, महामतये ,,
,, अजातशत्रवे ,,
,, आलोकाय ,,
,, सम्भाव्याय ,,
,, हव्यवाहनाय ,,
,, लोककाराय ,,
,, वेदकाराय ,,
,, सूत्रकाराय ,,
,, सनातनाय 120

,, महर्षये कपिलाचार्याय ,,
,, विश्वदीप्तये ,,
,, त्रिलोचनाय ,,
,, पिनाकपाणिभूर्देवाय ,,
,, स्वस्तिदाय ,,
,, सदा स्वस्तिकृते ,,
,, त्रिधाम्ने ,,
,, सौभगाय ,,
,, सर्वसर्वज्ञाय ,,
,, सर्वगोचराय 130

